திருவாமாத்தூர் கௌமாரசபை வெளியீடு

உ

குருவே துணை.

# திருவாமாத்தூர்
# பொய்கைக்கரை விநாயகப்பெருமான் பஞ்சரத்தினம்
# ★ திருவருட் கண்ணி. ★

மகான். வண்ணச்சரபம்

அருண்மிகு: **தண்டபாணி சுவாமிகள்** இயற்றியவை

திருவாமாத்தூர்

## திரு. தி. க. முருகேச முதலியார் அவர்கள்
## மணிவிழா மலர்.

---

மணி விழா நாள்: சுபகிருது ஆண்டு, புரட்டாசித்திங்கள் 4-ம் நாள்
(20—9—'62) வியாழக்கிழமை

குருவே துணை.



# முன்னுரை.

தமிழ்நாடு செய்த தவப்பயனாக இற்றைக்கு நூற்றிருபதாண்டுகட்கு முன் திருநெல்வேலியிற்றோன்றி இளமையிலேயே முருகனருளால் தமிழ்க் கவிகள் பாடும் தன்மைவாய்ந்து, எல்லா உயிரும் இன்புற்று வாழும் வகையிற் சென்றவிடமெல்லாம் அருள்நெறி வளர்த்து, முருகனது ஆறெழுத்தருமறையைத் தியானித்து, வேற்பூசை செய்து, பலருக்கும் அருட்குருவாகத் திகழ்ந்து, சமய பேதச்சார்பற்ற பெருங் கொள்கையுடன் முருகனருட்சிறப்பிலும், தவ வலிமையிலும், தமிழ்ப்புலமையிலும் நிகரின்றி விளங்கியவர் மகான். வண்ணச்சரபம், திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும் தவத்திரு. தண்டபாணி சுவாமிகளாவர். ஷை சுவாமிகள் சாத்திர, தோத்திர, வரலாற்று, இலக்கண நூல்கள் பல அருளி, பல தல சேவை செய்து இறுதியில் 64 ஆண்டுகட்கு முன் திருவாமாத்தூரில் தங்கி ஞான சமாதி கொண்டனர்.

ஷை சுவாமிகளால் நிறுவிய கௌமார மடாலயத்திற்குரிய அன்பர்கள் பலருளர். அவர்களுள் ஷை சுவாமிகளிடத்துப் பற்றுதலோடு, அவர்களது நூலின் மாண்புணர் திறனும், பாக்களுட் சிறந்ததாகிய "வெண்பா" என்னும் யாப்பை மிக எளிதிற் பாடும் சக்தியும் கொண்டு விளங்குபவர் திரு. க. முருகேச முதலியார் அவர்களாவர்.

என் நண்பர் திரு. க. முருகேச முதலியார் அவர்கள் அறுபதாண்டுகள் வாழ்ந்து இன்று மணிவிழாக் கொள்கிறார். இந் நன்னாளின் நினைவு மலராகத் தவத்திரு. தண்டபாணிசுவாமிகள் தமது திருக்கரம்கொண்டு எழுதிவைத்து வெளிவராமலிருக்கும் பல நூல்களுள் இரு நூல்களைப் பதித்து வெளியிடப்படுகிறது. இந் நூலின் நுண் கருத்துக்களை அன்பர்கள் கற்றுணர்வார்களாக. இதுபோன்ற நூல்கள் வெளிவரவும், மணிவிழாத் தலைவர் பல்லாண்டுகள் வாழவும் இறையருளை வேண்டுகின்றேன்.

இன்னணம்,

திருவாமாத்தூர்
20—9—62

தி. கு. இராமசாமி முதலியார்

# திரு க. முருகேச முதலியார் அவர்கள் மணிவிழா வாழ்த்து.

— வெண்பா. —

மாதை நகரில் மருவுமெழிற் செங்குந்த
மேதையரிற் றண்டுபுனை மெய்க்குரவன் - பாதமலர்
போற்றுமன்பும் வெண்பாப் புகலு மியல்புமுற்றேன்
சாற்றுமுரு கேசநண்பன் றான்.

என்னிடத்தும் மற்றோ ரிடத்தும் இனிமையுடன்
பன்னினிமை யோறாறு பத்தாண்டு — துன்னிமேல்
ஆண்டு தொடங்கும் அணிவிழா ஏற்றனன்பல்
ஆண்டுவப்பாய் வாழ்க அமைந்து

எந்தையிடம் கற்ற இயல்மா ணவருளொன்றும்
சொந்தமுடன் வெள்ளையுள்ளம் தோயுமிவன் - வந்தமனை
மக்களுடன் செல்வ வளமுயர்ந்து வாழ்வருள
மிக்ககுகன் றாள்போற்று வேன்.

இளமைமுதற் றண்டணிகை ஏய்ந்தபதத் தன்பு
வளமை யுறச்செய்த மாண்பால் — உளமகிழ்ந்து
தன்னறுப தாண்டுவிழாச் சாருமிநாள் அப்பெரியோன்
பன்னணிப்பாட் டீந்தான் பதித்து

கௌமார மடாலயம்,
திருவாமாத்தூர். 19—9—62

இன்னணம்,
ஞி. செ. முருகதாச ஐயா.

# வாழ்த்து.

முத்தமிழ்ச்சீர் போற்றும் முருகதா சக்குருதாள்
எத்தினமும் சிந்தைமிசை ஏற்றுவக்கும் — சித்தமிகு
நன்முருகே சப்பேர்கொள் நற்புனிதன் எஞ்ஞான்றும்
இன்பமைந்து வாழ்க இனிது.

அருமை யிருமுப்ப தாண்டுவிழாக் கொள்ளும்
முருகேச நற்பேர் முயங்கும் — திருவாளன்
வெண்பா மிகப்பாடும் விற்பனச்சீர் கொண்டோன்இத்
திண்பாரில் வாழ்க! சிறந்து

தண்டபா ணிக்குரவன் சாற்றுமருள் நூலிரண்டை
மண்டலத்தோர் கற்று மகிழவே - கொண்ட
மணிவிழா நாளின் மலரெனஅச் சிட்டின் (று)
அணிபெற்றன் வாழ்க அவிர்ந்து.

ஆறுபத் தாண்டுவிழா ஆர்ந்(து)உவப்பாய் இந்நாளில்
ஆறுபத் துக்கவிகள் அச்சிட்டோன் வாழியவே.

இன்னணம்,

திருவாமாத்தூர்
19—9—'62

தி. மு. சங்கரலிங்கம்,
தமிழாசிரியர்.

உ

கணபதி துணை.

திருவாமாத்தூர்

# விநாயகப் பெருமான் பஞ்சரத்தினம்.

காப்பு — வெண்பா

அஞ்சனஞ்சேர் கண்டத்தான் ஆமாத்தூர் வாழவந்த
குஞ்சரத்துக்(கு) ஐந்துகவி கூறுகின்றேன் — வஞ்சர்களைக்
கட்டும் கயிறும் கனற்கோபத்(து) அங்குசமும்
தொட்டுவளர் தோளே துணை.

நூல் — வெண்பா

சீர்மருவும் சோலைத் திருவாமாத் தூர்ப்பரமன்
பேர்மருவும் முத்தாம் பிகைவல்லி — நார்மருவும்
பாலனென வந்த பவளக் களிறே!நின்
கோலமொடு சேவை கொடு.

கட்டளைக் கலித்துறை.

கொடுப்பார் மலிவுறு மாதையில் ஐங்கரக் குஞ்சரமே!
எடுப்பார்கைப் பாலன் எனத்தடு மாறும் எனைஅருளில்
விடுப்பாய்என் றேநம்பி நின்பால்வந் தேனினி வெய்யநமன்
அடுப்பான் கொலோவெனும் அச்சம்உ ருதணைத்(து) ஆண்டுகொள்ளே

விருத்தம்

கொள்ளை முத்தமிழ்ப் பாட்டுறு மாதையிற் குளிர்புனற் றடஞ்சாரும்
பிள்ளை யேஅடற் குமரவேள் தனக்குமுன் பிறந்துயர் பெரியோனே!
வெள்ளை நித்திலம் அனையவா ணகைச்சியர் விரகமா தியமூன்றும்
எள்ளை நேர்சொலு மளவும்என் னிடத்துறு தின்னருள் பொழிவாயே!

இரட்டையாசிரியம்

வாயா லுனைத்துதித்துக் கருத்தால் உனது
வடிவினைக் கருதி நல்ல
மலர்வகை எடுத்துக் கரத்தா லருச்சித்து
வழிபாடு புரிய வல்லார்
பேயாம் எனப்பெரிதும் இகழவுல கிற்றிரிதல்
பெற்றநான் எற்றை நாளுன்
பெய்கழற் றுளினிடை பேதமற் றுற்றினிப்
பிறவாமை பெற்று மகிழ்வேன்
தீயார் குறிக்கரிய பிரணவப் பொருளான
தெய்வமே கைவலி யிறை

செந்தமிழ்க் கிழவியைக் கயிலாய மலைமீது
சேரவிடு கின்ற முதல்வா
தூயார் நெருங்குதிரு மாதையிற் கடவுளருள்
சுந்தரக் கணநாதனே!
துய்ப்பன மிகத்தரு பவர்க்கினிய வரமுதவு
தொல்வழக் குடைய பரனே.

அகவல்.

பரசிவன் மருவும் பற்பல பதியின்
சிரமெனக் குலவுந் திருவா மாத்தூர்ப்
பொய்கையங் கரையிற் புகர்நெடும் கிரிபோல்
நெய்குலாஞ் சென்னி நிமிர்தர விளங்கும்
ஐங்கரத் தமுதை, ஆகுவா கனத்துப்
புங்கவன் தன்னைப், பொருவா முத்தமிழ்க்
காவலற் குதவும் கருணையங் கடலைப்,
பாவலர் முதலிற் பரவும் பரனை,
அளப்பரும் பெருமை அறிந்தமட் டுரைப்பார்
உளப்பனி மலர்மீ(து) உறுங்கண பதியைப்,

பணிவார் தந்திருப் பதமலர் சென்னிக்(கு)
அணிவார் விரும்புவ ஆமெனத் தகுமோ
ஆயிரங் கண்ணுற் றமரரூர் புரப்போன்
மாயிருங் கமல மலர்ப்பொகுட் டுறைவான்
பாற்கடல் இடைத்துயில் பகவன்
மேற்படக் கொண்டு வியந்தபல் சீரே.

நூற்பயன் — வெண்பா

கஞ்சன் தலைகவர்ந்த கையினர்ஆ மாத்தூர்க்கோர்
தஞ்சமென வந்த தனியானை – செஞ்சதங்கைப்
பாத மலர்புனையும் பஞ்சரத்தி னத்தமிழை
ஓதவல்லார்க்(கு) உண்டாம் உரம்.

குருபாதமே துணை.



உ

குருவே துணை

# திருவருட்கண்ணி.

காப்பு.

தெண்ணிலவும் செஞ்சுடரும் செய்யும் திருவருளைக்
கண்ணிகொடு போற்றுதற்குக் காப்பும் அதுவாமே

நூல்

பொன்னே பொருளாப் புகல்வாரைப் போன்றுழலும்
என்னேர் உருவாய் இலங்காய்! திருவருளே. 1

யான்புரிந்த குற்றமள(வு) இல்லையே என்னினும்நீ
தான்பொறுத்துக் கொள்ளற் றகாதோ? திருவருளே. 2

முன்னம்சோ தித்ததனல் மூவாத் துயரமுற்றேன்
இன்னஞ்சோ திப்ப(து) இயல்போ? திருவருளே. 3

நன்மை மிகவிளக்கி நானிலத்தோர் வாழ்வதெண்ணி
புன்மை மலிந்துழலப் போமோ? திருவருளே. 4

ஞானக்கண் ணில்லா நரர்போற் றமியேனும்
ஈனர்க்(கு) இதம்பேசி எய்த்தேன் திருவருளே. 5

என்னசைவும் நின்னசைவே என்றுணரப் பெற்றபின்னும்
இன்னல் இடைப்பட்(டு) இடைந்தேன் திருவருளே 6
எல்லாம் உனதுசெயல் என்றறிந்து போற்றிசைக்கும்
வல்லார் நடுவிருக்க வைப்பாய்! திருவருளே. 7
வானுல வாழ்க்கையையும் வம்பென்று அருவறுக்கும்
நானுமிந்த வாறுழல்கை நன்றோ? திருவருளே. 8
பன்னருஞ்சீர் நல்கிப் பரிந்தாள வல்லாய்க்(கு)இங்(கு)
என்னளவும் வன்மம்வந்த(து) ஏனோ? திருவருளே! 9
தேவர்கண்டு நாணும் சிறப்படையச் சிந்திப்பேன்
யாவரினும் தாழ்வாய் இளைத்தேன் திருவருளே! 10
ஊனுரும் பொல்லார் ஒருங்கிகழ நானிறந்து
போனால் உனக்குப் புகழோ? திருவருளே! 11
முன்னம் பலவா மொழிந்தபடி செய்குவதற்(கு)
இன்னம் இரங்கா(து) இருந்தாய்! திருவருளே. 12
காமப் பிணியால் கலங்கும் தமியேனுக்(கு)
ஏமப் பெருந்துயரம் ஈய்ந்தாய்! திருவருளே! 13

வந்தனைசெய்(து) அன்பர்பலர் வாழ்ந்தார் எனும்கதையைச்
சிந்தனைசெய்(து) அந்தோ திகைத்தேன் திருவருளே. 14

சொன்னபடி செய்யும் துணிவில்லா நீதுணிவுற்(று)
அன்னவிதம் ஏன்றான் அறைந்தாய் திருவருளே. 15

உன்னையன்றித் தெய்வம் ஒருசிறிதும் இல்லையென்னும்
என்னைமறந் தார்போல் இருந்தாய்! திருவருளே 16

கொன்றருந்தி வாழும் குணங்கர்பகை கொண்டுழல்வேன்
நன்றடைதற் கானவரம் நல்காய்! திருவருளே. 17

ஐயோ குருவாய் அடிக்கடிநீ வந்துவந்து
பொய்யோமுன் என்பாற் புகன்றாய்! திருவருளே. 18

நீயேயிவ் வாறு நிகழ்த்தரிய வம்புசெய்தால்
நாயேன்உய் வேனோ நவிலாய்! திருவருளே. 19

வானவரும் கண்டு மனம்நாணத் தக்கநலம்
யானடையச் சற்றேனும் இரங்காய்! திருவருளே 20

ஈனர் உளத்தின் இறுமாப்புக்(கு) அஞ்சியஞ்சி
ஞானமுளார் வாடுவது நன்றோ? திருவருளே. 21

நல்லார் அநேகர்கண்டு நாணிமிக வாடிநிற்கப்
பொல்லார்க்(கு) உவகைநல்கப் போமோ? திருவருளே. 22

பத்தியொன்றே தஞ்சமெனப் பல்வாறு பாடுபட்டுஞ்
சத்தியமில் லார்போற் றளர்ந்தேன் திருவருளே. 23

அஞ்சல்என முன்னின்(று) அடியேனை ஆளாமல்
வஞ்சகங்கள் செய்தல் வழக்கோ? திருவருளே. 24

அந்நாள் ஒருகனவில் அஞ்சலளித்(து) ஆண்டபிரான்
இன்னுன் எனநீ இயம்பாய்! திருவருளே. 25

உள்ளத்(து) இனித்தும் உலகோர் பலவாருய்
எள்ளக் கசக்கும்விதம் யாதோ? திருவருளே. 26

நாவாரச் சொன்னபடி நல்கிலாய்! நம்புமன்பால்
ஈவாரை யும்தடுப்ப(து) ஏனோ? திருவருளே. 27

கண்டப் படவே கருதுவார் போன்றடியேன்
அண்டத்தில் மாய்தல் அழகோ? திருவருளே. 28

வண்டமிழாற் போற்றும் வடலூர்ப் புலவனையும்
தொண்டரொடு கூட்டத் துணிவாய்! திருவருளே. 29

அந்நாளிற் றொண்டர்க்(கு) அருள்புரிந்த வாறடியேன்
இந்நாள் இரங்காத(து) ஏனோ? திருவருளே! 30

கொல்லா விரதமொன்றுங் கோடாதார் கொள்ளுநெறி
எல்லாம் விழைந்தும் இடைந்தேன் திருவருளே 31

அம்புவியற் கொல்லும்வினை அத்தனையும் தீரவுன்னை
நம்பும் விதியுற்று நலிந்தேன் திருவருளே. 32

புல்லும் அருந்தாப் புனிற்றிளங்கன்(று) ஊன்உண்பார்
செல்லும்நெறி தூர்ந்தொழியச் செய்வாய்! திருவருளே 33

நல்லருளே மிக்கதென நானிலத்தில் நாட்டாத
வல்லவரைச் சற்றும் மதியேன்! திருவருளே 34

ஊனருந்தா மேன்மை உலகமுற்றும் எய்தாமுன்
ஞானமுத்தி யீந்தாலும் நண்ணேன்! திருவருளே 35

பாகோ டுறழ்தமிழால் பாடுமென்னைப் பாருலகோர்
மாகோர நிந்தைசெய வைத்தாய்! திருவருளே 36

பொன்னம் பொருளாற் புலர்கின்றேன் ஆனாலும்
என்னன்(பு)உன் றன்பால் இலையோ? திருவருளே. 37

தானாக வந்து தமியேன் இடத்தொருசொல்
மேனாள் உரைத்ததுவும் வீணோ? திருவருளே. 38

கன்னலம்பா(கு) அன்னமொழிக் கன்னியர்மால் கொண்டுருகும்
இன்னலிடைப் பட்டும் இடைந்தேன் திருவருளே. 39

எல்லா விதத்துயரும் ஈயவல்ல பொன்னாசை
கொல்லாமற் கொல்லக் குலைந்தேன் திருவருளே. 40

ஆடகப்பேய் என்னை அறியாமற் சூழ்ந்துகொண்ட
பாடனைத்தும் நீங்கும்வண்ணம் பாராய்! திருவருளே. 41

ஆனைத் திரளை அடக்குவதற்(கு) ஆசைகொண்டும்
பூனைக்கும் அஞ்சிப் புலர்ந்தேன் திருவருளே. 42

உன்னை நினைந்துநினைந்(து) உற்சாகங் கொண்டுமகிழ்
என்னைமறந்(து) எங்கே இருந்தாய்! திருவருளே. 43

ஈட்டியபே ராசை எனும்பேய் இடத்திலென்னைக்
காட்டிக் கொடுக்கை கடனோ? திருவருளே! 44

என்னாசை எல்லாம் இயல்பாய் அறிந்துளநீ
பொன்னாசைப் பேயைவிடப் போமோ? திருவருளே. 45

சோதிக்க வேறுபொருட் டோற்றமின்றிப் பொய்ப்பொருளால்
வாதிப்ப(து) உண்மை வழக்கோ? திருவருளே. 46

வஞ்சகரை எண்ணிஎண்ணி வாடும் படிபுரிந்தாய்!
கொஞ்சம்உன தாண்மை கொடுப்பாய்! திருவருளே. 47

ஆவலுடன் எவ்வுயிர்க்கும் ஆர்வநல்கும் புண்ணியத்தும்
பாவம்உயர்(வு) என்னப் படுமோ? திருவருளே. 48

மெய்பேசும் மேலோர் வெருண்டு குலைகுலையப்
பொய்பேசு வார்மகிழப் போமோ? திருவருளே. 49

எல்லாம் அறிந்தும் இரங்கா(து) இருக்குமுன்னைச்
சொல்லாற் பிதற்றிமிகச் சோர்ந்தேன்! திருவருளே. 50

ஆணவநோய் தீர்த்தோர்க்(கு) அடிமைசெய்ய வேண்டுமென்னை
வீணருடன் கூட்டி விடாதே! திருவருளே. 51

நூற்பயன்.

தெம்படையா(து) ஏங்கித் திருவருட் கண்ணியின்பாட்(டு)
ஐம்பதிற்(று) ஒன்றும் அறைவார்க்(கு) அதுவருமே.

திருவருள் துணை.

ராஜேஸ்வரி பிரஸ், விழுப்புரம்-62.

உ

குருவே துணை

## வாருகாற் பட்டினம்

# தோத்திரப் பதிகங்கள்

---

ஆசிரியர் :

மகான் வண்ணச்சரபம்,
அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்,
திருவாமாத்தூர்.



வாருகாற்பட்டினம் - திரு. கொ. பாட்சா ரெட்டியார் அவர்கள்

**மணிவிழா மலர்.**

25—5—1969



மகான் - வண்ணச்சரபம்

**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**

திருவாமாத்தூர் கௌமார சபை வெளியீடு-94

உ
குருவே துணை

வாருகாற் பட்டினம்

# தோத்திரப் பதிகங்கள்

---

ஆசிரியர் :
மகான் வண்ணச்சரபம், அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்,
திருவாமாத்தூர்.

பதிப்பாளர் :
வாருகாற்பட்டினம் - திரு. கொ. பாட்சா ரெட்டியார் அவர்கள்
**அறுபதாம் ஆண்டு நிறைவு விழா**
25-5-69-ல் நடைபெற்றபோது வெளியிட்ட
**மணிவிழா மலர்.**

# முன்னுரை

'வாருகாற் பட்டினம் தோத்திரப் பதிகங்கள்' என்ற இந்நூல் ஷெயூரில் கோயில் கொண்டுள்ள விநாயகர், வீரபத்திரர், முருகப்பெருமான் ஆகிய கடவுளர்மீது பாடப் பெற்ற துதி நூலாகும். இதனை இயற்றியருளியவர் மகான், வண்ணச்சரபம், திருப் புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும் அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள் என்ற பெரியாராவர்.

இவர், 1839–ல் தென்பாண்டி நாட்டுத் திருநெல்வேலியில் அவதரித்து இளமை முதல் வேலாயுதப் பூசையில் ஈடுபட்டு, முருகனருளால் தமிழ்க்கவிகள் இயற்றும் வன்மை கைவரப்பெற்றார். இதன் பயனாகப் புலவர் புராணம், தமிழலங்காரம், தில்லைத்திருவாயிரம், திருவரங்கத்திருவாயிரம், பழனித் திருவாயிரமென ஆயிரம் ஆயிரம் கவிகளைக்கொண்ட பல நூல்களும், துதி நூல்களும், இலக்கண, நாடகநூல்களும் இயற்றினர். இவரால் இயற்றப்பட்டு ஏட்டுச்சுவடியில் எழுதிய பாடல்கள் தற்போது ஐம்பதாயிரத்திற்கும் அதிகமாயுள்ளன. சிவகருணை நெறி தழைக்கத் தொண்டாற்றியவர். பலதல வழிபாடு செய்தவர். இறுதியில் நடுநாட்டில் விழுப்புரத்தையடுத்த திருவாமாத்தூர்ச் சிவதலத்தில் தங்கித் தவம்புரிந்து 1898–ல் ஞான சமாதி கொண்டனர்.

சுவாமிகளால் பாடப்பெற்ற நூல்களுள் ஒரு பகுதியான இந்நூல் வாருகாற் பட்டினத்தில் வேமன மரபில் பிறந்து வாழ்ந்து தற்சமயம் ஷெ திருவாமாத்தூரில் தங்கி இறைவனை வணங்கும் பேறுபெற்றவராகவும், இந்நூலாசிரியர்மீது நிறைந்த ஈடுபாடு கொண்டவராகவும் விளங்குபவர் திரு. கோ. பாட்சா ரெட்டியார் அவர்களாவர்.

இவரும், இவர் தம் மனைவி திருமதி. இரேணுகாம்பாள் அவர்களும் சிறந்த அன்புடையவர்கள். மக்கட்செல்வம் கொண்டவர்கள். இவரது அறுபதாம் ஆண்டு நிறைவு மணிவிழா சௌமிய ஆண்டு, வைகாசித்திங்கள் 12-ம் நாள் 25—5—69 பூர நட்சத்திரம் திங்கட்கிழமையன்று திருவாமாத்தூர் கௌமார மடாலயத்தில் நிகழ்ந்தபோது தங்கள் ஊர்ப்பதிகங்களடங்கிய இந்நூலைப் பதித்து வெளியிட்டனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இந்நூலாசிரியரான சுவாமிகள் வழிபாடு செய்த வேலாயுதங்கள் பல. அவைகளுள் ஒன்று இன்றும் ஷை பூர் கௌமார மடாலயத்தில் வழிபாட்டிலுள்ளது. இஃது வாருகாற்பட்டினத்தில் செய்யப்பெற்றதாகும். இதுபற்றிச் சுவாமிகள், குருபரதத்துவம் என்ற தமது நூலில் ஓரிடத்தில்,

"பாரும் வானும் புகழ்குகன்வேற் படையின் பூசை செயும்ஆசை
தீரும் படிவிட் டிருந்தும்அவன், செயலாற் பின்னும் இச்சையுண்டாய்
வாரு காற்பட் டினத்திலொரு, வடிவேல் செயச்செய் ததிற்கும்ப
நீரும் மலரும் பெய்துமுன்னை, நியமப் படிபூ சனைபுரிந்தேன்."

என்கிறார்கள். இவ்வாறு முன்னாள் தொடர்புடைய வாருகாற்பட்டினம் வாழ் திரு. ரெட்டியார் அவர்கள் இங்கு வந்து தங்கியிருந்து மணிவிழாக்கொள்வது சிறப்புடையது. திரு கொ. பாட்சா ரெட்டியார் அவர்களும், அவர் தம் மனைவி, மக்களும், உறவினரும் நலமுடன் பல்லாண்டு வாழ முருகப்பெருமான் திருவருள் பெருகுவதாக. நலம்.

அன்பன்,

திருவாமாத்தூர்,
விழுப்புரம் P. O.

தி மு. சங்கரலிங்கம், தமிழாசிரியர்.

திருவாளர். கொ. பாட்சா ரெட்டியாரவர்கள்

## மணிவிழா வாழ்த்துக்கவி

கட்டளைக் கலித்துறை

திருத்துறை பூர்பா திரிப்புலி யூர்நடுச் சேர்ந்து,நலம்
பெருத்துறை வாருகாற் பட்டினத் தூரிற் பிறந்தநல்லோன்
குருத்துறை தோய்வே மனமர போன்,தொண்டர் கூட்டம்விழை
கருத்துறை பாட்சா இரெட்டியா ரென்னக் கவினன்பனே. 1

ரேணுகை நாமம் இலங்கிடும் நன்மனை யில்லறத்திற்
காணுறு மக்களும் செல்வமும் பெற்ற கனமுடையான்
பேணும் அறுபதாம் ஆண்டு நிறைவாய்ப் பிறங்குமணம்
பூணுத லுற்றனன்; வாழ்கபல் லாண்டிப் புவியிடத்தே. 2

தண்டபா ணிக்குரு நாதன் மடாலயந் தன்னிலன்பர்,
கொண்டநட் பாளர், மகிழ மணிவிழாக் கூடப்பெற்ற
தொண்டர்,பாட் சாரெட்டி யார்,மனை மக்கள் துலங்குமின்பாய்
மண்டலம் போற்றிட வாழ்கஎன் றென்றும் மகிழ்வுறவே. 3

இங்ஙனம்
நூலாசிரியர் பெயரர்
**தி. செ. முருகதாச ஐயா.**
கௌமார மடாலயம், திருவாமாத்தூர்.

உ
கணபதி துணை

# வாருகாற் பட்டினம்

# கணபதி பதிகம்

---

### காப்பு—வெண்பா

வாருகாற் பட்டினத்தில் வாழும் கணபதியே!
நீருமென்சொற் கேட்க நினைத்தீரே!—சீருலவு
செந்தமிழால் ஓர்பதிகம் செப்புகின்றேன் சீக்கிரமா
வந்தருளும் நல்ல வரம்.

### நூல்—கொச்சகக்கலிப்பா

சுத்தபர தத்துவத்தில் தோய்ந்தவர்கள் வேடமிட்டுப்
பித்தர்மனை தோறும்போய்ப் பேதலித்து நிற்கின்றேன்
எத்தனைபேர் வந்தாலும் இல்லையென்று(து) இட்டுண்ணும்
பத்தர்மலி வாருகாற் பட்டினத்துக் கணபதியே. 1

பொய்யனெனப் பல்லோர் புகலப் பொருள்தேடி
ஐயமிடார் வாயிலுக்கும் அந்திபகல் செலலாமோ,
கையதனிற் கோடுகொண்டு கார்ஆகு மீதேறிப்
பையவரும் வாருகாற் பட்டினத்துக் கணபதியே. 2

பெண்ணைச் சுமந்து பிறைசூடி நின்ருடி
விண்ணைப் பிளக்குமுன்றன் மேனி என்று காண்பேனே?
மண்ணைத் துளைத்தபச்சை மாயவனைப் போன்றபயிர்ப்
பண்ணைமிகும் வாருகாற் பட்டினத்துக் கணபதியே. 3

ஏவ வருவார்போன்(று) என்கனவில் அன்றுவந்(து)ஓர்
பாவனையைக் காட்டியது பாழாகிப் போய்விடுமோ ?
மூவலிலாத் தாரகத்தின் மூலையான முன்னவனே!
பாவலர்சூழ் வாருகாற் பட்டினத்துக் கணபதியே. 4

ஐந்தாய கைம்மலரும் ஆனைமுகப் பேரழகும்
திந்தாஎன் ருடும்எழிற் றிருவடியும் காட்டாயோ?
கொந்தாரும் கொன்றைமலி குளிர்சோலை எங்குமின்னுர்
பந்தாடும் வாருகாற் பட்டினத்துக் கணபதியே. 5

தேங்காயும் முப்பழமும் செங்கரும்போ டுள்ளனவும்
வாங்காமல் இட்டுனையே வணங்குவேன் வந்தருளாய் !
நீங்கா நிறைவானாய்! நெற்றிவிழி யாய்! மதத்த
பாங்காளர் வாருகாற் பட்டினத்துக் கணபதியே. 6

சிவன்முதலா மூவர்களும் தெண்டனிடும் நின்தாளை
எவர்களும்முன் போற்றிசெய்யும் இயல்புணர்ந்தும் இடை [கின்றேன்
தவளமதிக் கோடேந்தும் தந்திமுகத் தம்மானே !
பவளநிகர் வாருகாற் பட்டினத்துக் கணபதியே. 7

நிகரில்லாப் பொன்னிதந்து நீள்பொருளை யாறளித்த
புகழெண்ணிப் போற்றுக புலவரையும் மதிப்பேனோ
இகல்மலியும் அங்குசமும் எழிற்கயிறும் ஏந்திநின்றாய் !
பகரருஞ்சீர் வாருகாற் பட்டினத்துக் கணபதியே. 8

கந்தவேள் கும்பிடும்நாள் கானகத்திற் போயொருத்தி
அந்தரங்கத் தோடணைதற் கானவிதம் செய்திலையோ?
கொந்தவிழும் ஆத்தியணி குஞ்சரமே ! குளிர்சோலைப்
பைந்தகைய வாருகாற் பட்டினத்துக் கணபதியே. 9

நீலவன்னச் சிற்றாடை நிறைந்தவுள்ளன் போடளித்தாள்
காலமறிந் துதவியவள் கண்டபடி காண்பதென்றோ,
சால அருள்பொழியும் தந்திமுகப் பெம்மானே !
பாலர்மிகும் வாருகாற் பட்டினத்துக் கணபதியே. 10

பத்திதரும் வாருகாற் பட்டினத்துக் கணபதியைச்
சித்தர்களுக் காசைகொண்டு திருநெல்லை யூருடையான்
சத்தியமாய்ப் போற்றிசெய்யும் தமிழ்ப்பதிகம் கற்றுணர்வார்
நித்தியமும் கற்பகத்தின் நீழலிடை வாழ்வாரே. 11

முற்றிற்று.

# வீரபத்திரர் பதிகம்

### காப்பு—வெண்பா

வாருகாற் பட்டினத்தில் வாழ்வீர பத்திரனார்
பேரில் ஒருபதிகம் பேசுதற்கு—நாரணன்பாற்
சக்கரமொன் றீந்தருளித் தந்திமுக னைத்தடிந்த
மக்கள் இருவருங்கா வல்.

## நூல்

### அறுசீர் விருத்தம்

கடல்சூழும் உலகத்தீர் ஒருவசனம் மெய்யாகக் கழறக் கேண்மோ,
உடல்சோர வெருண்டுவலி யுள்ளாருக் கொதுங்கியிதம் உரைக்க வேண்டாம்,
மடல்வாழைப் பொழில்மலியும் வாருகாற் பட்டினத்தில் வாழ்வோ னான
அடல்வீர பத்திரனைப் பணிவீரேல் பகைமுழுதும் அழியும் அன்றே. 1

விறல்வீர பத்திரனை வாருகாற் பட்டினத்தின் மேவிக் கண்டு
திறலாரும் மனத்தினராய் ஐந்தெழுத்தும் மறவாது செப்பா தாரை
மறமேவும் கொடுங்கூற்று விடுந்தூதர் பிடித்தடித்து வதைத்துத் தீயில்
உறவீழ்த்திக் களிப்பார்என் றுரனத்தோ டாகமமும் உரைக்கு மன்றே. 2

மிக்கபுகழ் வாருகாற் பட்டினத்தார் இடுக்கணற விலக்கும் நீரால்
தக்கபுகழ் பெறும்வீர பத்திரனர் மாமனைமுன் தடிந்தார் என்றே? [பின்னுள்
முக்கண்முகம் ஆயிரம்கொண் டுறும்அவருக்(கு) அடிமைசெயும் முகுந்தன்
சிக்கமெனப் பீலியணி திருவுருக்கொண் டவன்மாமன் சிரங்கொய் தானே. 3

பத்தர்மிகும் வாருகாற் பட்டினத்தில் வளர்வீர பத்தி ரானன்(று)
எத்தருணத் தழைத்தாலும் அத்தருணத் தவன்முகங்கள் ஈரைஞ் ஞூறும்
அத்தமிரண் டாயிரமும் அவற்றிலுள்ள படைபலவும் அவிரக் காணும்
சித்தனொரு வனைக்கண்டால் என்மனம்போல் இவ்வுலகும திருத்தி யாமே. 4

இடர்கோடி செய்பவல்லத் தக்கனைக்கொன் றமரர்குழாம் எல்லாம் ஓடக்
குடர்மாலை தரித்துவரும் வாள்வீர பத்திரனைக் கும்பிட் டேத்திப்
படர்சூழல் வாருகாற் பட்டினத்தார் தம்மோடு பழகி யப்பால்
தொடர்வேள்விக் கூன்வேண்டும் என்றுரைப்பார் குலமழிக்கும் தொண்டு நன்றே.

நஞ்சணிந்த மிடற்றானை நல்வீர பத்திரனை நகுவெண் திங்கட்
பிஞ்சவிரும் சடையானை வாருகாற் பட்டினத்தெம் பெருமான் தன்னைக்
குஞ்சரம்ஒன் றுரித்தானைக் கொண்டாடிப் பணிபுரியும் கூர்ப்புள் ளாரைக்
கஞ்சமலர்ப் பிரமாவும் அவன்துணையும் கொடுங்கூற்று கருதொண் ணாதே. 6

காருலாம் பொழிலிடத்து மயிலாடக் குயில்கூவும் கவின்மிக் கார்ந்த
வாருகாற் பட்டினத்தில் வளர்வீர பத்திரனை மதுரத் தீம்பால்
மேருநேர் முலைக்காளி களிகூரப் புணர்வானை விண்ணோர் ஏத்தும்
பேருளான் தனைக்கருதிப் பேசும்நாள் பிறந்தபயன் பெற்ற நாளே. 7

சித்தலையிற் புழுநெளிவ தறியாமற் றரைதூர்க்கும் தீயோர் செந்நீர்
நீத்தமுறக் கழுவேற்றும் கவுணியன்போல் ஒருபெரியோன் நிலவக் காண்பாய்!
பூத்தமலர்ப் பொழில்சூழும் வாருகாற் பட்டினத்தார் புகழும் கோவே !
பார்த்தனுக்குப் பாசுபதம் அருள்வீர பத்திரனே பழுதில் லானே ! 8

ஆனைமுகக் கணபதியும் ஆறுமுகத் தொருசேயும் அன்றிப் பின்னும்
மேனைமகள் பால்குடித்தார் உளர்எனக்கேட் டெளியேனும் விருப்ப முற்றேன்
சோனைமுகிற் குலமகலா வாருகாற் பட்டினத்தார் துதிக்க நின்றாய் !
வானையுற நிமிர்வரைபோல் வளர்வீர பத்திரனே வாழ்விப் பாயே. 9

பால்வனநீ றணிந்தானை வாருகாற் பட்டினத்தெம் பரமன் தன்னை
மால்வருந்தப் பொருதானை வாள்வீர பத்திரனை மதுரச் செஞ்சொல்
நால்வருக்கன் றருள்புரிந்த நல்லானைப் போற்றிசெயும் நாயி னேற்கு
வேல்வளர்கைக் குமரன்போல் வாழும்நலம் கிடைத்தக்கால் மிகநன் றாமே. 10

குல்லைமலர் அனையானை வாருகாற் பட்டினத்திற் குடிகொண் டோனைத்
தொல்லைமகம் அழித்தானைத் துடிவீர பத்திரனைச் சூலத் தானை
நெல்லைநகர்ப் பாவலவன் துதித்தகவி ஒருபதுமே நிகழ்த்த வல்லார்
மல்லைவென்று சொல்லைவென்று மறலியைவென் றெந்நாளும் மகிழ்வா ரன்றே.

முற்றிற்று.



# முருகப்பெருமான் பதிகம்

காப்பு—வெண்பா

காருலாந் தோகைமயிற் கந்தவே ளுக்கினிய
வாருகாற் பட்டினத்தை வாழ்த்துதற்குப்—பாருலகம்
ஆதியாய்ச் சொல்லுமுல கத்தனையும் போற்றிசைக்கும்
சோதிவேல் ஒன்றே துணை.

நூல்

வெண்டளைக்கலிப்பா

தன்னடியார் செஞ்சொல் தமிழ்ப்பாட லிற்சிறிது
சொன்னவர்க்கும் காவல்செய்யும் சோதிவடி வேலானூர்
பொன்னகரிப் பூந்தருக்கள் போலும் பொழிலிடத்து
வன்ன மயிலாடும் வாருகாற் பட்டினமே. 1

சாதல் பிறத்தலெனும் தட்டழிவு நீங்கும்வண்ணம்
காதலிக்கும் நல்லோர் கருதும்வேற் கையானூர்
பூதலத்தில் மானிடரே போன்றிருக்கும் புண்ணியராம்
மாதவத்தோர் கூட்டமிகும் வாருகாற் பட்டினமே. 2

வஞ்சம் ஒழித்து மறைநூல் வழிநடக்கும்
நெஞ்சகத்தார் அன்பில் நிலவுங் குகவேளூர்
குஞ்சரங்கள் ஆர்க்கக் குரக்கினங்கள் கண்மூட
மஞ்சடரும் பூஞ்சோலை வாருகாற் பட்டினமே. 3

காவி மலரும் கடம்பும் கலந்தணிந்து
தேவினங்கட் கெல்லாம் சிறந்தோங்கும் செவ்வேளூர்
பூவினமும் வண்டும் பொலியும் புகழார்ந்த
வாவிபல சூழும் வாருகாற் பட்டினமே. 4

தொண்டர் விரும்பும் தொழிலெல்லாம் செய்வதன்றி
விண்டலமும் காக்கும் விதிர்வேலான் மேவியஊர்
கொண்டல் இனம்போல் கொடுப்பார் குலாவுகையால்
வண்டமிழோர் கொண்டாடும் வாருகாற் பட்டினமே. 5

தங்கையெனும் வாணி தனக்கினிய நூல்உணர்த்தி
அங்கைத் திருநீறு அளிக்கும் முருகோனூர்
செங்கை மலரிற் சிறுகழங்கும் அம்மனையும்
மங்கையர்கள் கொண்டுதிகழ் வாருகாற் பட்டினமே, 6

வேரிக் குராமலரும் வெட்சியொடு கூதளமும்
தாரிற் கலந்தணிவான் தங்கியதாற் சீரியவூர்
காரிற் கிசையாகிக் காசினியோர்க் காருயிராம்
மாரிச் சிறப்புமிகும் வாருகாற் பட்டினமே. 7

கொள்ளைத் தமிழ்ப்பாடல் கூறுதற்காக் காழியிலோர்
பிள்ளைத் திருவுருவம் பெற்ற பெருமானூர்
கள்ளைப் பருகும் வண்டிற் கண்ணுடையார் காதிடத்தில்
வள்ளைக் கொடிமிளிரும் வாருகாற் பட்டினமே. 8

சூரன் குலமழித்துத் தொண்டுசெய்யும் வானவரைச்
சீரணவு பொன்னூரிற் சேரவிடும் சிற்பரனூர்
காரனைய கூந்தற் கவினார் படைசூழும்
மாரனனையார்வாழ் வாருகாற் பட்டினமே. 9

பூவகத்தோன் மாயன் புரமெரித்தோன் என்னும்ஒரு
மூவர்களும் போற்றி மொழியும் முருகோனூர்
தேவர் உலகினரும் சென்றுதளிர் கொண்டுமகிழ்
மாவடரும் சீர்மலியும் வாருகாற் பட்டினமே. 10

கருவாழி தூர்த்துக் கதிசேர்வார்க் கெல்லாம்
குருவாகித் தோன்றும் குமரவேள் வாழுமூர்
பொருவாத மேன்மை பொருந்துவண்ணம் நாடி
வருவார்க் குவகைநல்கும் வாருகாற் பட்டினமே. 11

வேழ மகளோடு வேடமகள் வேண்டுசெவ்வேள்
வாழ வருமெழில்சேர் வாருகாற் பட்டினத்தைச்
சூழவயல் ஓங்குநெல்லைத் தொண்டனுவல் சொல்விழைவார்
ஆழ வுணர்வுற்(று) அரியபுகழ் தோய்வாரே. 12

முற்றிற்று.

ஹநுமான் அச்சியந்திரசாலை, விழுப்புரம்.

# நூலாசிரியர் அருளிய முக்கிய நூல்களுட் சில.

| | | | |
|---|---|---|---|
| புலவர் புராணம் (அச்சில்) | ... | | |
| திருவரங்கத் திருவாயிரம் | ... | 2 | 00 |
| தமிழலங்காரம் | ... | 0 | 50 |
| திருவாமாத்தூர்த் தல புராணம் | ... | 2 | 00 |
| கௌமார முறைமை | ... | 0 | 50 |
| தியானுனுபூதி (உரையுடன்) | ... | 0 | 50 |
| தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழ் | ... | 0 | 50 |
| சென்னை முருகன் பிள்ளைத்தமிழ் | ... | 0 | 50 |
| சிதம்பரம் பாண்டிநாயகம் பிள்ளைத்தமிழ் | ... | 0 | 50 |
| தண்டபாணி சுவாமிகள் வரலாறு (உரைநடை) | ... | 0 | 50 |
| சடகோபர் சதகத்தந்தாதி | ... | 0 | 50 |
| தண்டபாணி விஜயம் | ... | 1 | 50 |
| அருணகிரிநாதர் புராணம் | ... | 1 | 50 |
| தில்லைபாதி – நெல்லைபாதி | ... | 0 | 10 |
| குருநாதன் அந்தாதி | ... | 0 | 50 |
| குருபரதத்துவம் (சுவாமிகள் அனுபூதியுடன்கூடிய வரலாறு) | ... | 2 | 00 |
| முசுகுந்த நாடகம் | ... | 0 | 50 |

மற்றும் பிற.

கிடைக்குமிடம்:

**தி. செ. முருகதாச ஐயா.**

தலைவர், கௌமார மடாலயம், திருவாமாத்தூர்,
விழுப்புரம் அஞ்சல்.

## நூலாசிரியர் அருளிய முக்கிய நூல்களுட் சில.

| | | | |
|---|---|---|---|
| புலவர் புராணம் (அச்சில்) | ... | | |
| திருவரங்கத் திருவாயிரம் | ... | 2 | 00 |
| தமிழலங்காரம் | ... | 0 | 50 |
| திருவாமாத்தூர்த் தல புராணம் | ... | 2 | 00 |
| கௌமார முறைமை | ... | 0 | 50 |
| தியானுனுபூதி (உரையுடன்) | ... | 0 | 50 |
| தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழ் | ... | 0 | 50 |
| சென்னை முருகன் பிள்ளைத்தமிழ் | ... | 0 | 50 |
| சிதம்பரம் பாண்டிநாயகம் பிள்ளைத்தமிழ் | ... | 0 | 50 |
| தண்டபாணி சுவாமிகள் வரலாறு (உரைநடை) | ... | 0 | 50 |
| சடகோபர் சதகத்தந்தாதி | ... | 0 | 50 |
| தண்டபாணி விஜயம் | ... | 1 | 50 |
| அருணகிரிநாதர் புராணம் | ... | 1 | 50 |
| தில்லைபாதி – நெல்லைபாதி | ... | 0 | 10 |
| குருநாதன் அந்தாதி | ... | 0 | 50 |
| குருபரதத்துவம் (சுவாமிகள் அனுபூதியுடன்கூடிய வரலாறு) | ... | 2 | 00 |
| முசுகுந்த நாடகம் | ... | 0 | 50 |

மற்றும் பிற.

கிடைக்குமிடம்:

**தி. செ. முருகதாச ஐயா,**

தலைவர், கௌமார மடாலயம், திருவாமாத்தூர்,

விழுப்புரம் அஞ்சல்.